உ

திருச்சிற்றம்பலம்.

# திருக்குற்றாலக்குறவஞ்சி.

இஃது,

சிதம்பரம்

## கருணானந்தசுவாமிக

ளவர்களால்

பார்வையிடப்பட்டு,

சிந்தாத்திரிப்பேட்டையிலிருக்கும்

பிரபாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

௧௮௬௭௵.



உ

திருச்சிற்றம்பலம்





# திருக்குற்றாலக்குறவஞ்சி

## விநாயகர் துதி.

ஆசிரியவிருத்தம்.

பூமலியிதழிமாலை புனைந்தகுற்றாலத்தீசர் ... ... ... *
கோமலர்ப்பாதம்போற்றிக் குறவஞ்சித்தமிழைப்பாட ... *
மாமதத்தருவிபாயு மலையெனவளர்ந்தமேனிக் ... *
காமலிதருப்போலைந்து கைவலான்காவலானே ... ...*

## சுப்பிரமணியக்கடவுள் துதி.

ஆசிரியவிருத்தம்.

பன்னிருகைவேல்வாங்கப் பதினொருவர் படைதாங்கப் பத்துத்திக்குந் *
நன்னவவீரரும்புகழுமலைகளெட்டுங்கடலேழுநாடியாடப் ... ... *
பொன்னின்முடியாறேந்தியஞ்சுதலையெனக்கொழித்துப்புயனான்மூன்று
தன்னிருதாடருமொருவன்குற்றாலக்குறவஞ்சித்தமிழ்தந்தானே... [ய்த்

## திரிகூடநாதர் துதி.

ஆசிரியவிருத்தம்.

கிளைகளாய்க்கிளைத்தபலாக்கொம்பெலாஞ்சதுர்வேதக்கிளைகளீன்ற ... *
களையெலாஞ்சிவலிங்கங்கனியெலாஞ்சிவலிங்கங்களீன்ற ... ... *
சுளையெலாஞ் சிவலிங்கம் வித்தெலாஞ்சிவலிங்கச்சொரூபமாக - விளையு
மொருகுறும்பலவின்முளைத்தெழுந்த சிவக்கொழுந்தைவேண்டுவோமே

# குற்றாலக்குறவஞ்சி.

## குழல்வாய்மொழியம்மை துதி.

### ஆசிரியவிருத்தம்.

தவளமதிதவழ்குடிமுப்பனிவரையின்மூளைத்தெழுந்து தகைசேர்முக்கட்
பவளமலைதனிலாசைபடர்ந்தேறிக் கொழுந்துவிட்டுப்பருவமாகி ... *
யவிழுநீர்த்துறைப்பூங்கடப்பந்தாமரையுமீன்றொருகோட்டாம்பலின்று [மே
குவலயம்பூத்தருள்கொடியைக் கோதைகுழல்வாய்மொழியைக்கூறுவோ

### மூவர் துதி - ஆசிரியவிருத்தம்.

தலையிலேயாறிருக்கமாமிக்காகத்தாங்குகடலேழழைத்த திருக்குற்றால
ர்- சிலையிலேதடித்ததடப்புயத்தைவாழ்த்திச் செழித்தகுற வஞ்சிநாடகத்
தைப்பாட-வலையிலேமலைமிதக்கவேறிலனுமத்தியிலேபூவையந்நாளழை
ப்பித்தானுங் - கலையிலேகிடைத்தபொருளாற்றிற்போட்டுக் கனகுளத்தி
லெடுத்தானுங் காப்பதாமே ... ... ... ... .. *

### அகத்தியர் வாதவூரர் துதி.

### ஆசிரியவிருத்தம்.

நித்தர்திரிகூடலிங்கர்குறவஞ்சி நாடகத்தைநிகழ்த்தவேண்டி ... *
முத்தர்திருமேனியெலலாமுருகவேதமிழுரைத்தனினிலையப்பாடி .. *
இத்தனுவிலாத்துமம்விட்டிறங்குநாட்சிலேட்டுமம்வந்தேறுவண்ணம் *
பித்தனடிதுணைசேர்ந்தவாதவூரானடிகள்பேணுவோமே ... ... *

### சரஸ்வதி துதி

### ஆசிரியவிருத்தம்

அடியிணைமலருஞ்செவ்வா யாப்பலுஞ்சிவப்பினளை ... *
நெடியபூங்குழலுமைக்கணிலருங்கறுப்பினளைப் ... ...*
படிவமும்புகழுஞ்செங்கைப்படிகம்போல வெளுப்பினளைக்
கொடியுதனைத்திருக்குற்றாலக்குறவஞ்சிக்கியம்புவோமே...*

### நூற்பயன்

### ஆசிரியவிருத்தம்

சிலைபெரிய வேடனுக்கு நரிக்கும்வேதச் செல்வருக்குந்தேவரு
க்குமிரங்கி மேனாட், கொலைகளவு கட்காமங் குருத்துரோகங் கொழ்யப

ஞ்சபாதகமுந்தீர்த்ததாலே,நிலவணிவார்குற்றாலநினைத்தபேர்கணினைத்த வரம்பெறுவராதுநினைக்கவேண்டிப்,பலவளஞ்சேர்குறவஞ்சி நாடகத்தைப்படிப்பவர்களுங்கேட்பவர்க்கும் பலனுண்டாமே ... ... ... *

(அவையடக்கம் - ஆசிரியவிருத்தம்.)

தாரினைவிருப்பமாகத் தலைதனில்முடிக்குந்தோறும்... *
நாரினைப்பொல்லாதென்றேஞாலத்தோர்தள்ளுவாரோ
சீரியதமிழ்மாலைக்குட்செல்வர்குற்றாலநாதர் ... ... *
பேரினைலெனதுசொல்லைப்பெரியவர்தள்ளார்தாமே *

கட்டியக்காரன்வருகிற - விருத்தம்.

தேர்கொண்டவசந்தவீதிச்செலவாகுற்றாலத்தீசர்... ... *
பார்கொண்டவிடையின்மேலேறும்பவனியெச்சரிக்கைகூற ... *
நேர்கொண்டபுரிநூன்மார்புநெடியனகப்பிரம்புமாகக்... *
கார்கொண்டமுகில்போலேறென்னக்கட்டியக்காரன்வந்தான் ... *

இ-ம்-தோடி-தாளம்-சாப்பு

கண்ணிகள்.

க - பூமேவுமநுவேந்தர்தேவேந்தர்முதலோனைப்... ... *
புரந்திடுஞ்செங்கோலானபிரம்புடையான் ... *

உ - மாமேருச்சிலையாளர்வரதர்குற்றாலநாதர் ... ... *
வாசற்கட்டியக்காரன்வந்தனனே ... ... ... *

கட்டியக்காரன்சொல்லுகிற - விருத்தம்.

மூக்கெழுந்தமுத்துடையா ரணிவகுக்குநன்னகரமூதூர்வீதி, வாக்கெழுந்தகுருமுனிக்காய்மறியெழுந்தகரங்காட்டும்வள்ளலார்சீர்த் - தேக்கெழுந்தமறைநான்குஞ்சிலம்பெழுந்த பாதர்விடைச்சிலம்பின்மேலதி-மேக்கெழுந்தமதிக்குடிக்கிழக்கெழுந்தஞாயிறுபோல்மேவினாரே... ... *

## திரிகூடநாதர் பவனிவருதல்.

தரு-இராகம்-பந்துவராளி-தாளம்சாப்பு, *

பல்லவி,

பவனிவந்தனரே-மழவிடைப்-பவனிவந்தனரே ... *

அநுபல்லவி,

அவனிபோற்றியகுறும்பலாவுறைபேருன்றாயகமோவன்னாயகர் ... *
சிவனுமாயரியயனுமானவர்சவனமால்விடையதனிலே... ... (பவனி)

# குற்றாலக்குறவஞ்சி.

[சரணங்கள்]

௧- அண்டர்கூட்டமுமுனிவர்கூட்டமுமசுரர்கூட்டமுமனிதராகிய-தொ
ண்டர்கூட்டமுமிமைப்பிலாரெனச்சூழ்ந்து,தனித்தனிமயங்கவே-பண்
டைநாரிவர்தேவரிவரெனப்பகுத்துநிறுவியவேளைதொறுந்தோறும்ம
ண்டலீகரைநந்திபிரம்படிமருட்டகோடியிற்புடைக்கவே.....(பவனி)

௨ - தடுப்பதொருகரங்கொடுப்பதொருகரந்தரித்தசுடர்மழுவிரித்ததொ
ருகரம்-எடுத்தசிறுமறிபிடித்ததொருகர மிலங்கைப் பணியணு துலங்க
வே - அடுத்தவொருபுலிகொடுத்தசோமனுமானைகொடுத்தவி தானைச்
சேலையும்,உடுத்ததிருமருங்கசையமாலயன்றொடுத்தபரிகல மிசையவே

௩ - தொடருமொருபெருச்சாளியேறிய தோன்றல் செயப்படைதாங்க
வே-யடல்குலாவியதோகைவாகனத்தாசுவேல்வலம்வாங்கவே - படல
மார்செறிற்கொன்றைமாலிகைபதக்கமணியொளிதேங்கவே - யுடைய
நாயகன்வரவுகண்டுகண்டுலகெலாந்தழைத்தோங்கவே ... (பவனி)

௪ - இடியின்முழக்கொடுபடருமுகிலெனயானைமேற்கனபேரிமுழக்கமு
ந்-துடியின்முழக்கமும்பாரந்[illegible]திசைக்கரி துதிக்கையாற்செவிபுதைக்க
வே-அடியர்முழக்கியதிருப்பல்லாண்டிசையடைத்தசெவிகளுந்திறக்க
மூவர்கள், வடிசெய்தமிழ்திருமுறைகளொருபுறமறைக ளொருபுறம்
விளங்கவே ... ... ... ... ... ... ... ... (பவனி)

௫ - கனகதம்புருகின்னரங்கழலாசவீணைமிழற்றவே-யனசர்திருமுத்தின்
சிவிகைகவிகைபொன்னாலவட்டநிழற்றவே-வநிதமார்பலகுஞ்சஞ்சா
மரைவரிசைவிசிறிசுழற்றவே-தனதனிந்திரன்வருணன்முதலியசகலதே
வரும்வழுத்தவே... ... ... ... ... ... ... ... (பவனி)

௬ - சைவர்மேலிடச்சமணர்கீழிடச்சகலசமயமுமேற்கவே - கைவலாழி
யங்கருணைமாலொடுகமலத்தோன்புடைகாக்கவே- ஐவர்நாயகன்வந்த
னன்பலவமரர்நாயகன்வந்தனன்-தெய்வநாயகன்வந்தனனென்னச்
சின்னமெடுத்தெடுத்தார்க்கவே ... ... ... ... ... (பவனி)

௭ - சேனைபெருக்கமுந் தானைப்பெருக்கமுந் தேரின்பெருக்கமுந்தாரி
ன்பெருக்கமும்-ஆனைப்பெருக்கமுங்குதிரைப்பெருக்கமுமவனிமுழு
தினும்நெருங்கவே-மோனைக்கொடிகளின் காடுநெடுவெளிமூடியடங்க
[illegible]மெழுந்துதிசை
[illegible] ... (பவனி)

௮-கொத்துமலர்க்குழல்தெய்வமங்கையர்குரவைபாவையைநெருக்கவே யொத்ததிருச்செவியிருவர்பாடல்களுலகம்மழையுமுறுக்கவே, மத்தளம் புயல்போன்முழக்கிட மயிலனார்நடம்பெருக்கவே, சத்தியபிரவிகௌரி குழன்மொழித்தையலாளிடமிருக்கவே ...................... (பவனி)

பவனிகாணப் பெண்கள்வருகின்ற

விருத்தம்.

பாலேறும்விடையில்வருந்திரிகூடப்பெருமானார்பவனிகாண ... ... *
காலேறுங்காமனுக்குக்கையேறும்படைப்பவுஞ்சாய்க்கன்னிமார்கள் *
சேலேறுங்கலகவிழிக்கணைதீட்டிப்புருவநெடுஞ்சிலைகள்கோட்டி ......*
மாலேறப்பொருதுமென்றுமணிச்சிலம்புமுரசறையவருகின்றாரே ...*

பெண்கள்சொல்லுகின்ற - கண்ணிகள்

இராகம் - புன்னாகவராளி - சாப்புதாளம்.

க- ஒருமானைப்பிடித்துவந்த பெருமானைத்தொடர்ந்தவரு... *
மொருகோடிமான்கள்போல.................. வருகோடிமடவார்

உ- புரிநூலின்மார்பணிவனயனென்பாரரியனாகிற்............ *
பொங்கரவேமேனிதனிச் ...................... சங்கமேதென்பார்

௩- விருகருணைமாலென்பார்மாலாகில்விழியின்மேல்......... *
விழியுண்டோமுடியின்மேல் ............ முடியுண்டோவென்பார்

௪- இருபாலுநான்முகனுந் திருமாலும்வருகையா......... *
லீசனிவன்திரிகூட ...................... .. வாசனிவனென்பார்

௫- ஒருகைவளைபூண்டபெண்கள் ஒருகைவளைப்பூணமறந்... *
தோடுவார்நகைப்பவரை.......................நாடுவார்கவிழ்வார்

௬- மெய்வளையுமறுவுடையதெய்வநாயகன்முடித்த......... *
வெண்மதியம்விளங்குதெங்கள் .. ...... பெண்மதியோவென்பார்

௭- இருதனத்தூரவிக்கைதன்னை யரையிலுடைதொடுவா......*
இந்தவுடைரவிக்கையெனச் ... ... ...சந்தமுலைக்கிடுவார்

௮- கருதுமணம்புறம்போகக் கண்ணுக்குமையெடுத்த ...... *
கையுமாயொருகண்ணிட்ட...... ... மையுமாய்வருவார்

௯- திருபவனிவனன்னைத்தெருவிலேநெடுநேரம் ... *
நில்லாதேநீருவசனஞ் சொல்லாதேயென்பார்

௰- பைவளைத்துணுக்கிடக்குமிவன் மெய்வளையும்பாம்புகட்கும் *
பகையாதோவென்றழைத்தான்.. ... பகையாதோவென்பார்

௰௧- இவ்வளைக்கைத்தோளழுந்தவிவன்மார்பிலழுந்தாது......*
வென்றூலைநமக்கெழுந்த ... ... வன்னமூலையென்பார்
௰௨- மைவளையுங்குழல்சோரக்கைவளைகொண்டானிதென்ன *
மாயமோசடைதரித்த ... .... ஞாயமோவென்பார்

வசந்தவல்லிவருகின்ற - விருத்தம்.

நன்னகர்ப்பெருமான்முன்போய்நாணமுங்கலையுந்தோற்ற ... *
கன்னியர்சநுப்போற்சாட்டிக்காமவேள்கலகமூட்டிப் ... *
பொன்னணிதிலகந்தீட்டிப்பூமலர்மாலைசூட்டி ... ... *
வன்னமோகினியைக்காட்டிவசந்தமோகினிவந்தாளே ... *

இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்

கண்ணிகள்

௧- வங்காரபூஷணம்பூட்டித்-திலதந்தீட்டி ... ... *
மாரனைக்கண்ணாலேமருட்டிச் ... ... *
சிங்காரமோகனப்பெண்ணாள்-வசந்தவல்லி... ... *
தெய்வரம்பைபோலவேவந்தாள் ... *
௨- கண்ணுக்குக்கண்ணிணைசொல்லத்-திரிகூடக் ... *
கண்ணுதலைப்பார்வையால்வெல்லப் ... *
பெண்ணுக்குப்பெண்மயங்கவே-வசந்தவல்லி ... *
பெடைஅன்னம்போலவேவந்தாள் ... *
௩. கையாரச்சூடகமிட்டு-மின்னாளைவெல்லக் ... ... *
கண்ணிலொருநாடகமிட்டு ... ... *
ஒய்யாரமாகநடந்து- வசந்தவல்லி ... ... *
யோவியம்போலவேவந்தாள் ... ... *
௪- சல்லாபமாதுலீலர்-குற்றாலநாதர் ... ... *
சந்தநெடும்வீதிதனிலே ... ... *
உல்லாசமாதரதிபோல்-வசந்தவல்லி ... ... *
யூர்வசியுநாணவேவந்தாள் ... .... *

(இதுவுமது.)

இ-ம்-பைரவி-அடதாளசாப்பு

கண்ணிகள்.

௧- இருண்டமேகஞ்சுற்றிச்சுருண்டுசுழியெறியுங்கொண்டையாள்- குழை
எறியாடிநெஞ்சைச்சூறையாடும்விழிக்கெண்டையாள் ... *
திருந்துபூமுருக்கினரும்புபோலிருக்குமிதழினாள்-வரிச் ... *
சிலையைப்போல்வளைந்துபிறையைப்போலிலங்குநுதலினாள் ... *

௨- அரம்பைதேசவில்லும்விரும்பியாசைசொல்லும்புருவத்தாள்-பிறர் *
அறிவைமயக்குமொருகருவமிருக்குமங்கைப்பருவத்தாள்...... *
கரும்புபோலினித்துமருந்துபோல்வடித்தசொல்லினாள்-கடல் ... *
கத்துந்திரைகொழித்தமுத்துநிரைபதித்தபல்லினாள் ... ... *
௩- பல்லினழகையெட்டிப்பார்க்குமூக்கிலொருமுத்தினாள்-மதி ... *
பழகும்வடிவுதங்கியழகுகுடிகொளுமுகத்தினாள் ... ... ... *
வில்லுப்பணிபுனைந்துவல்லிக்கமுகைவென்றகழுத்தினாள்-ஜகம் ... *
விலைபிட்டெழுதியின்ப நிலைபிட்டெழுதுந் தொய்யிலெழுத்தினாள்
௪- கல்லுப்பதிந்ததங்கச்செல்வக்கடகமிட்டசெங்கையாள்-எங்கும் ... *
கச்சுக்கிடக்கினுந்தித்திச்சுக்கிடக்குமிருகொங்கையாள் .. ...*
ஒல்லுங்கருத்தனர்மனக்கல்லுஞ்சுழிக்குமெழிலுந்தியாள்-மீது .. *
ஒழுங்குகொண்டுள்ளத்தைவிருங்குஞ்சிறும்ராகுபந்தியாள் ... *
௫- துடியுள்ளடக்கியொருபிடியுள்ளடங்குஞ்சின்னவிடையினாள்-காமத்
துட்டனரண்மனைக்குக்கட்டுங்கதலிவாழைத்தொடையினாள் ... *
அடுக்குவர்ணச்சேலையெடுத்துநெறிபிடித்தவுடையினாள்-மட ... *
அன்னநடையிலொருசின்னநடையிலுப் நடையினாள் ... ...*
௬- வெடித்தகடலமுதையெடுத்துவடிவுசெய்தமேனியாள்-ஒரு ... *
வீமப்பாகம்பெற்றகாமப்பாலுக்கொத்தசீனியாள்... ... ...*
பிடித்தசுகந்தவல்லிக்கொடிபோல்வசந்தவல்லிபெருக்கமே-சத்தி *
பீடவாசர்திரிகூடநாதர்சித்தமுருக்குமே ... ... ... ... *

வசந்தவல்லி பந்தடிக்கின்ற

விருத்தம்.

வித்தகர் திரிகூடத்தில் வெளிவந்தவசந்தவல்லி ... ... *
தத்துறுவிளையாட்டாலோதடமுலைப்பணைப்பினாலோ ...*
நத்தணிகரங்கள்சேப்பநாலடிமுன்னேயோங்கிப் ... ... *
பத்தடிபின்னேவாங்கிப்பந்தடிபயில்கின்றாளே ... ...*

இ-ம்-பைரவி-சாப்புதாளம்.

கண்ணிகள்

௧- செங்கையில்வண்டுகலீர்கலீரென்றுசெயஞ்செயமென்றாட-இடை-சு
ங்கதமென்றுசிலம்புபுலம்பொடுதண்டைகலந்தாட- இருகொங்கை
கொடும்பகைவென்றனமென்றுகுழைந்துகுழைந்தாட-மலர்ப்-பைங்
கொடிநங்கைவசந்தசௌந்தரிபந்துபயின்றனளே ... ... *
௨- பொங்குகனங்குழைமண்டியகொண்டைபுரண்டுபுரண்டாட-குழல்-
மங்குலில்வண்டு கலைந்ததுகண்டுமதன்சிலை வண்டோட - இனி-இங்

இதுகண்டிலைகெல்பமெல்புமென்றிடைதிண்டாட-மலர்ப் ... *
பங்கயமங்கைவசந்தசௌந்தரி பந்துபயின்றனளே ... ... *

௩- சூடகமுன்கையில்வால்வளைகண்டிருதோள்வளைநின்றாட-புனை ... *
பாடகமுஞ்சிறுபாதமுமங்கொருபாவனைகொண்டாட-நய ... *
நாடகமாடியதோகைமயிலெனநன்னகர்வீதியிலே-அணி ... *
யாடகவல்லிவசந்தவொய்யாரியடர்ந்துபந்தாடினளே ... ... *

௪- இந்திரியோவிவள்சுந்தரியோதெய்வரம்பையோமோகினியோ-மன *
முந்தியதோவிழிமுந்தியதோகரமுந்தியதோவெனவே-உயர் ... *
சந்திரசூடர்குறும்பலவீசுரர்சங்கணிவீதியிலே-மணிப் ... ... *
பைந்தொடிநாரிவசந்தவொய்யாரிபொற்பந்துகொண்டாடினளே

இதுவும்-வசந்தவல்லி-பந்தாடுகின்ற
விருத்தம்

கொந்தடிப்பூங்குழல்சரியநன்னகரில்வசந்தவல்லிகொடியகாமன் ... *
முந்தடிபிந்தடியிடபோய்மூன்றடிநாலடிநடந்துமுடுகிமாதர் ... *
சந்தடியிற்றிருகியிடசாரிவலசாரிசுற்றிச்சகிமார்சூழப் ... ... .. *
பந்தடிக்கும்பாவனையைப்பார்க்கவயனாயிரங்கண்படைத்திலானே ... *

தரு-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்,
பல்லவி.
பந்தடித்தனள்வசந்தசுந்தரி-வித்தையாகவே
அநுபல்லவி.
மந்தரமுலைமேசலாடமகரக்குழைகளூசலாடச்-சுந்தரவிழிபூசலாடத் *
தொங்கத்தொங்கத்தொங்கத்தொம்மெனப் ... ... ... (பந்த)
சரணங்கள்,
க- பொன்னினொளிவில்வந்துதாவியமின்னினொளிவுபோலவே ... ... *
சொன்னயத்தனைநாடிநாடித்தோழியருடன்கூடிக்கூடி ... ... *
நன்னகர்த்திரிகூடம்பாடிநகுர்தத்திகுர்தமெதாம்மெனப் (பந்

வசந்தவல்லி-சுவாமிகளைக்காண்கிற
விருத்தம்

வருசங்குவீதிதன்னில் வசந்தபூங்கோதைகாலி .. ... *
விருபந்துகுதிகொண்டாட விருபந்துமுலைகொண்டாட...*
வொருபந்துகைகொண்டாடவொருசெப்பிலஞ்சுபந்துந் *
தெருவந்துவித்தையாடுஞ் சித்திரனையெதிர்கண்டாளே ... *

தரு-இ-ம்-அடாணா-ரூபகதாளம்.

பல்லவி.

இந்தச்சித்தராரோ-வெகு

அநுபல்லவி.

விந்தைக்காரராகவிடையில்வந்தாரோ .. ...... (இந்தச்)

சரணங்கள்.

௧- நாகம்புயத்திற்கட்டிநஞ்சுகழுத்திற்கட்டிக் ... *
காகமணுகாமலெங்குங்காடுகட்டி ... ... *
பாகந்தனிலொருபெண்பச்சைக்கிளிபோல்வைத்து *
மோகமாயொருபெண்ணைமுடியில்வைத்தார் ... (இந்தச்)
௨- மெய்யிற்சிலம்பழகுங்கையின்மழுவழகும் ... *
மையார்விழியார்கண்டால்மயங்காரோ .. ... *
செய்யசடையின்மேலேதிங்கட்கொழுந்திருக்கப் ... *
பையைவிரிக்குதம்மாபாம்புசும்மா ... ... (இந்தச்)
௩- அரிக்கண்பார்வையாலேயனங்கன்றங்கமாக ... *
உருக்கிப்போட்டார்கண்டவுடனேதான் ... ... *
பெருக்கம்பார்க்கிலெங்கள்திருக்குற்றாலர்போல ... *
விருக்குதிவர்செய்மாயமொருக்காலே ... (இந்தச்)

தோழிமார்சொல்லக்கேட்டு

வசந்தவல்லி-மோகங்கொள்ளுதல்.

விருத்தம்.

திங்களைமுடித்தார்கண்டாய்திரிகூடச்செல்வர்கண்டா ... *
யெங்குள்சித்துக்கெல்லாமிறையவரிவரோயென்று ... *
நங்கைமார்பலருங்கூறநன்மொழித்தேறன்மாத்தி [ளே
மங்கையாம்வசந்தவல்லி மனங்கொண்டாள்மயல்கொண்டா

இ-ம்-புன்னாகவராளி-ரூபகதாளம்.

கண்ணிகள்.

௧- முனிபரவவினியானேனுமுழுப்பலவின்கனிதானே ... *
கனியில்வைத்தசெந்தேனைகருத்துருக்கவந்தானே ... *
தினகரன்போற்சிவப்பழகுந்திருமிடற்றிற்கறுப்பழகும் *
பனகவணிக்காதுங்கண்டாற்பாவையுந்தானுருகிவாடோ ... *
௨- வாகனைக்கண்டுருகுதையோடியக்கமதாய்வருகுதையோ . *
மோகமென்பதிதுதானோமுன்னமேநானறிவேனோ ... *

ஆகமெல்லாம்பசந்தேனேயன்னைசொல்லுங்கசந்தேனே ... *
தாகமன்றிப்பூணேனேசரிவளையுங்காணேனே ... ... *

பாங்கிகள்-புலம்பல்.

விருத்தம்.

நடைகண்டாலன்னந்தோற்குநன்னகர்வசந்தவல்லி ... *
விடைகொண்டானெதிர்போர்ச்சங்கவீதியிற்சங்கந்தோற்றாள் ... *
சடைகொண்டானுண்டதான்கொண்டுதன்னுடைகொடுத்தானைய *
னுடைகொண்டவழக்குத்தானேனூர்கண்டதேர்கண்டாளே .. *

இ-ம்-தோடி-தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

க- ஆசைகொண்டுபாரிவிழுந்தாள்நேசமானனென்பார்-விளை ... *
யாடாள்பாடாள்வாடாமாலைசூடாள்காணனென்பார் ... *
பேசொணுதோமோசமென்னமோசமோவென்பார்-காமப் ... *
பேயோவென்பார்பிச்சோவென்பார்மாயமோவென்பார் *
உ- ஐயோவென்னசெய்வோமென்பார்தெய்வமேயென்பார் [பார்
களைப்பாச்சோவென்பார் மூச்சேதென்பார்ப்பேச்சேதோவென்
கையிற்றிருநீறெடுப்பாதையலாரெல்லாம்-குலக் ... *
கையர்திரிகூடநாதாகண்பாராயென்பார் ... ... *

வசந்தவல்லியைப்-பாங்கிகளுபசரித்தல்.

விருத்தம்.

வானவர்திருக்குற்றாலர்மையலால்வசந்தவல்லி ... ... *
தானுடல்சோர்ந்தாளென்றுதமனியமாடஞ்சேர்த்து ... *
மேனையாரழகுதோற்றமின்னனார்விழுந்திம்பனைக் ... ... *
கூனகொண்டமிழ்த்துவார்போற்குளிர்ச்சியால்வெதுப்புவாரே *

இ-ம்-கல்யாணி-சாப்புதாளம்.

கண்ணிகள்.

க- முருகுசந்தனக்குழம்புபூசுவார்-விரகத்தீயை ... *
மூட்டிமூட்டிவிசிறிவீசுவார் ... ... *
கருகுதேயுடலுருகுதேயென்பார்-விரித்தளிருங் ... *
கரியுதேமூத்தம்பொரியுதேயென்பார் ... ... *
உ- அருகிலிருந்துகதைகடத்துவார்-எடுத்துமாதர் ... *
அணைத்துவாழைக்குருத்திற்கிடத்துவார் ... ... *

பெருகுநன்னகர்க்குறும்பலாவினார்-வசந்தமோகினிப் *
பெருநிலாவினோடு குலாவினார் ... ... *

வசந்தவல்லி-சந்திரதூஷணஞ்செய்தல்.

விருத்தம்,

பெண்ணிலோர் குழன்மொழிக்கோர் பங்குகொடுத்தவர் கொடுத்த பிரமையாலே, மண்ணிலேமதிமயங்கிக்கிடக்கின்றேனுனக்குமதிமயக்கந் தானோ, கண்ணிலேநெருப்பைவைத்துக்காந்துவாருடன்கூடிக்காந்திக்காந்தி, பெண்ணிலேநெருப்பைவைத்தாய் தண்ணிலாக் கொடும்பாவிவெண்ணிலாவே ... ... ... ... ... (௰௧)

இராகம்-வராளி- ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧- தண்ணமுதுடன்பிறந்தாய் ... ... ...வெண்ணிலாவே- அந்தத்
தண்ணளியையேன்மறந்தாய் ... ...வெண்ணிலாவே
பெண்ணுடன்பிறந்ததுண்டோ .. ...வெண்ணிலாவே-என்றன்
பெண்மைகண்டுங்காயலாமோ ... வெண்ணிலாவே
௨- விண்ணிலேபிறந்தவர்க்கோ ... வெண்ணிலாவே - ஒரு
விட்டுநானெறிந்ததற்கோ ... வெண்ணிலாவே
கண்ணில்விழிபாதவர்போல் ... ...வெண்ணிலாவே- மெத்த
காந்தியாட்டமாட்டுகிறாய் ... வெண்ணிலாவே
௩- ஆகடியஞ்செய்தல்லவோ ... ... வெண்ணிலாவே - நீதா
னாட்கடியன்போற்குறைந்தாய் வெண்ணிலாவே
மோகம்வரக்காணெனென்றால் ... வெண்ணிலாவே - இந்த
வேகமுனக்கானதென்ன ... வெண்ணிலாவே
௪- நாகமென்றேயெண்ணவேண்டாம் ... வெண்ணிலாவே - இது
வாகுகுழற்பின்னல்கண்டாய் ... வெண்ணிலாவே
சோகனைவிறழித்தாய் ... ... வெண்ணிலாவே-திரிகூட
லிங்கர்முன்போய்க்காய்வாய் ... வெண்ணிலாவே

வசந்தவல்லி- மன்மததூஷணஞ்செய்தல்

விருத்தம்,

தண்ணிலாமௌலிதந்தமையலான ஞதையுறந்துதையலார்கள் ... *
எண்ணிலாப்பகையெடுத்தாரின்னகைநன்னகரொன்றெவர்சொன்னாரோ
அண்ணலார்திரிகூடநாதரொன்பாரொன்னளவுமமைந்திடாரோ ... *
வெண்ணிலாக்குடைபிடித்துமீனகேதனம்பிடித்தவேனிலானே *

இராகம்-எதுகுலகாம்போதி-தாளம்-சாப்பு

கண்ணிகள்

க- கைக்கரும்பெண்ணைக்கணையெல்லாநீயென்ன ... மன்மதா - இந்தச்
செக்கருப்பாவிநிலாவும்போதாதோ மன்மதா
மைக்கருங்கண்ணாளிரதிக்குமால்கொண்ட.... மன்மதா - விடை
வல்லார்க்குமாசைகொண்டபொல்லாப்பெண்மேலுண்டோ மன்மதா
உ- திக்கெல்லாந்தென்றற்புலிவந்துபாயுதே... மன்மதா - குயிற்
சின்னம்பிடித்தபின்னம்பிடியாதே மன்மதா
அக்காளெனுஞ்சகிவெட்காமலேசுவாள் ... மன்மதா - அவ
ளல்லாமற்றுயொருபொல்லாதநீயிகாண் மன்மதா
௩- நேரிழையானையுழையையும்பாரடா ... மன்மதா - கண்ணில்
நித்திரைதானொருசத்துருவாச்சுதே மன்மதா
பேரிகையேனன்றிப்பூரிகையேன்பிள்ளாய் ... மன்மதா - சிறு
பெண்பிள்ளைமேற்பொருதாண்பிள்ளையாவையோ- மன்மதா
௪- வார்சடையீதல்லதார்குழற்பின்னல்காண் ... மன்மதா - நெற்
றிநந்தகண்ணல்லசிந்துரரேகைபார் மன்மதா
நாரிபங்காளர்தென்னாரியநாட்டினர் ... .. மன்மதா - எங்கள்
நன்னகர்க்குற்றாலர்முன்னமேசெல்லுவாய் மன்மதா

பாங்கிவினவுதல்- விருத்தம்,

படியேழுடையார்திரிகூடப்படைமாமதனைப்பழித்தியசொல் ... *
அடியேசகியாதிருக்கையிலேயதுநான்பயின்றுலாதாதோ ... *
கொடியேமதுரம்பழுத்தொழுகுங் கொய்பேவம்புபொருதழலைப்... *
பிடியேமதுகுடிக்கொருபெண்பிள்ளாய்கருத்துவிள்ளாயே ... *

வசந்தவல்லி-பாங்கிக்குரைத்தல்

இராகம் - கல்யாணி - சாப்புதாளம்
கண்ணிகள்,

க- மெய்யார்க்குமெய்யர்திரிகூடநாயகர்பீதில் - மெத்த ... *
மையல்கொண்டேனந்தச்செய்தியைக்கேளாய்நீசகியே ... *
செய்யசடையுந்திருக்கொன்றைமாலையுமழகுமவர் ... ... *
கையில்மழுவுமென்கண்ணைவிட்டேயகலாதே ... ... ... *
உ- கங்கைக்கொழுந்தணிதெய்வக்கொழுந்தைநான்கண்டு-குளிர் . *
திங்கட்கொழுந்தையுந்தீக்கொழுந்தாக்கிக்கொண்டேனே ... *

சங்கக்குழையாளைச்சங்கமறுகினிற்கண்டு-இரு ... *
செங்கைக்குட்சங்கமுஞ்சிந்திமறிகிவிட்டேனே ... *

௩- மன்றற்குளவிமதியம்புனைந்தாளைக்கண்டு-சிறு ... *
தென்றற்குளவிதினங்கொட்டக்கொட்டநொந்தேனே *
குன்றச்சிலை யாளர்குற்றாலநாதர்முன்போனேன்-மதன் ... *
வென்றிச்சிலைகொண்டுமெல்லவெல்லப்பொருதானே *

௪- பெம்மானைநன்னகர்ப்பேராஜவீதியிற்கண்டு-அவர் ... *
கைம்மானைக்கண்டுகலையைநெகிழவிட்டேனே ... *
செப்பமேனிதன்னிற்சிறுகறுப்பானைநான்கண்டு-இன்று *
அம்மாவென்மேனியடங்கலுமேகறுத்தேனே ... *

௫- வெள்ளிவிடையில்வியாழம்புனைந்தாளைக்கண்டு-இந்த *
நள்ளியதிங்களைஞாயிறுபோலக்கண்டேனே ... *
எள்ளளவுணுமுறக்கமுமில்லாளைக்கண்டு-நானும் ... *
எள்ளியவுணுமுறக்கமுமற்றுவிட்டேனே ... ... *

பாங்கிபழித்தல்-விருத்தம்.

தரைப்பெண்ணுக்கணிபோல்வந்ததமனியக்கொடியேமாதர் ... *
துரைப்பெண்ணேவசந்தவல்லிசொன்னபேதமைக்கென்சொல்வேன் *
வரைப்பெண்ணுக்காஸ்சபூண்டுவள்சங்கமறுகினூடே ... ... *
நரைத்தமாடேறுவார்க்கோநங்கைநீமயல்கொண்டாயே ... *

வசந்தவல்லிசுவாமிகளைப்புகழ்ந்துகூறல்

இ-ம்-சௌராஷ்டிகம்-ரூபகதாளம் *

கண்ணிகள்

மன்னவர்குற்றாலர்செய்தியின்னமின்னங்கேளாயோமானே ....அவர்
வாகனத்தின்மால்விடைக்குலோகமெல்லாமோராடிகாண்மானே *
சன்னிதியிற்பேறல்லவோபொன்னுலகிற்றேவர்செல்வமானே - தினபல
சந்திரருஞ்சூரியரும்வந்திறங்கும்வாசல்கண்டால்மானே ... ௩
நல்னகரிவிருக்குநாளொருத்திதானொவாசைகொண்டேன்மானே ...*
கன்னியருமாசைகொண்டார்புன்னியருமாசைகொண்டார்மானே *
தென்னிலங்கைவாழுமொருகன்னிகைவண்டோதரியாள்மானே அவர்
பொன்னணையிற்சேர்ந்தணையஎன்னதவஞ்செய்தாளோமானே *

இதுவும்-வசந்தவல்லிபாங்கிச்சொல்லுகிற

விருத்தம்.

வேரிலேபழம்பழுத்துத்தூரிலேகிளைவடித்துவெடித்தநீந்தேனி ... *
பாரிலேபாதாளகங்கைநந்தலைக்குநிந்தபதுந்தலைகங்கை .. *
நீரிலேகிளைபெருகுங்குற்றாலசமகாலுவிருக்குநிமலமூர்த்தி ... *
பேரிலேபிரமைகொண்டபெண்களிலே நானுமொருபெண்கண்டாயே

பாங்கிசொல்லல

விருத்தம்

வசந்தவல்லாசவல்லிவல்லிகருப்பவல்லிபேசி... ... *
பசந்தந்தாரிபாட்டுபுங்கண்டால்பரமன்மேலாசைகொண்டாய்
திசந்தருந்திருக்குற்றாலர்நிரந்தரமோத்துபுன்பா.. ... *
விசைந்திடக்கருமமேமேதா விசையநீயிசைத்திடாயே .. *

வசந்தவல்லி-வருந்துதல்

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

கண்ணிகள்

௧- புரந்துநெருப்பைமூவர்க்கவித்தவர்மையல்கொண்ட ... என்
நெருத்திகாமநெருப்பையவிக்கவார் ....... *
பருத்தமலையைக்கையிலினைக்கிலார் ... ... கொங்கையான
பருவமலையைக்கையிலினைக்கிறார் ... *

௨- அஞ்சுதலைக்குளாறுதலைவைத்தார் ... ... எனதுமனதினில்
அஞ்சுதலைக்குளாறுதலைவையார் ... *
நஞ்சுபருகியமுகங்கொமித்தவர் ... .. எனதுவாள்விழி
நஞ்சுபருகியமுகங்கொமிக்கிலார் .. ...*

௩- தேவர்தமைதன்சாபந்தீர்ந்தவர் ... வன்னமாங்குயிற்
சின்னத்துரைதன்சாபந்தீர்க்கிலார் .. *
யாவரும்புகழ்திருக்குற்றாலர்தாம் .. சகலபேர்க்கு
மிரங்குவாரெனக்கிரங்கிலார்பெண்ணே .. . *

பாங்கிசொல்லுகிற-விருத்தம்

நன்னகர்திருக்குற்றாலநாதர்மேலாசைபூண்டு ... ... *
சொன்னவர்க்கிணங்கவார்த்தைசொல்லவும்படித்துக்கொண்டாய் *
என்னிதுவிசேஷஞ்சொல்லத்தக்கதோமிக்கதோதாய் ... . *
என்னிலானதுநான்சொன்னேனினியுனதிச்சைதானே ... , *

வசந்தவல்லி-பாங்கியைத்தூதனுப்புதல்

தரு-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்

பல்லவி,

தூதுநீசொல்லிவாராய்பெண்ணே-குற்றாலர்முன்போய் *
தூதுநீசொல்லிவாராய்பெண்ணே ... ... ... ... *

அநுபல்லவி,

ஆதிநாட்சுந்தரர்க்காய்தூதுபோனவர்பாலே...(தூது)

சரணங்கள்,

க- உறங்கவுறக்கமும்வாராது-மாயஞ்செய்தானை-மறந்தால் மறக்கவுங்கூடாது-பெண்ஜனனமென்று-பிறந்தாலும் பேராசையாகாது - ஆகாதென்றுநான்-அறிந்துஞ்சங்குகைக்காரர்க்காசையானேனிப்போது(தூ)

உ-நேற்றைக்கெல்லாங்குளிர்ந்துகாட்டி-இன்றுகொதிக்குந்நித்திலாப்பாவிக்கென்னபோட்டி-நடுவேயித்தக்-காற்றுக்குவந்ததொருகோட்டி-விரகநோய்க்கு-மாற்றுமருந்துமுக்கண்மருந்தென்றுபாஞ்சாட்டி(தூது)

ங- வந்தாலிந்நேரம்வரச்சொல்லு - வாராதிருந்தால்-மாலையாகிலுந்தரச்சொல்லு-குற்றாலநாதர்-தந்தாலென்னெஞ்சைத்தரச்சொல்லு-தாராதிருந்தால்-தாம்பெண்ணாகியபெண்ணைநான்விடேனென்றுசொல்லு(தூ)

வசந்தவல்லி-பாங்கிக்குச்சந்திசமயஞ்சொல்லுதல்

விருத்தம்.

செவ்வேளையின்றருள்வார்சிலவேளைவென்றருள்வார் திரும்பத்தாமே *
யவ்வேளையழைத்தருள்வாரவர்வேளையொருவருக்கு மறியொண்ணாதால்
கைவேழமுரித்தவர்குற்றாலர்கொலுவையாருக்குங்காணொண்ணாதால் ... *
எவ்வேளைபலவுமுண்டுவியல்வேளையான்சொலக்கேண்மின்னனாளே *

தரு-இ-ம்-பியாகடை-ஆதிதாளம்,

க- திரிகூடராஜருக்குத் திருவனந்தல்முதலாகத் ... *
தினமுமொன்பதுகாலங் ... ... ... ... கொலுவிற்சகியே

உ- பெரிதானவபிஷேகமெழுகாலமுமொருவர் ... *
பேசுதற்குச்சமயமல்ல ... ... ... ... கண்டாய்சகியே

ங- வருநாளிலொருநாளன்றிருநாளும்வசந்தனுக்கு ... *
மாதவ[illegible] ... ... ... ... றப்புஞ்சகியே

௪- ஒருநாளுக்கொருநாளில்வியனுகக்குழன் மொழிப்பெண் *
ணுகந்திருக்குங்கொலுவேளை .. ... ... ... கண்டாய்சகியே

௫- பெத்தரிக்கமிகுந்திருக்குங்குற்றாலநாதலிங்கர் ... ... *
பெருங்கொலுவிற்சமய ... ... ... ... மறியாமற்சகியே

௬- சித்தரொடுதேவர்கணஞ்சிவகணங்கள்தடைசெயத்... ...*
திருவாசற்கடைநிற்பார் ... ... ... .. ... சிலபேர்சகியே

௭- அத்தலையிற்கடந்தவர்கள்நந்திபிரம்படிக்கொதுங்கி ... *
ஆட்கொண்டார்குறட்டில்நிற்பார் ... ... ... சிலபேர்சகியே

௮- மைத்தருங்கண்மாதர்விட்டவண்டுகளுங்கிள்ளைகளும்... *
வாசல்தொருங்காத்திருக்கும் ... ... ... ... கண்டாய்சகியே

௯- கோலமறையோதியசங்கரவிசுவநாதனருள்... ... ... *
குற்றாலச்சிவராமநம்பி ... ... ... ... செய்யுஞ்சகியே

௰- பாலாறுநெய்யாறுயபிஷேகநைவேத்தியமும் ... ... *
பணிமாறுகாலமூன் ... ... ... ... கொண்டருளிச்சகியே

௰௧- நாலுமறைப்பழம்பாட்டுமூவர்சொன்னதிருப்பாட்டு...*
நாலுகவிப்புலவர்புதுப்... ... ... ... ... பாட்டுஞ்சகியே

௰௨- நீலகண்டர்குற்றாலர்தேவியுடன்கொலுவிருப்பார் ... *
நீக்கமில்லையெல்லார்க்கும் ... ... .. பொதுக்காண்சகியே

௰௩- அப்பொழுதுகுற்றாலர்தேவியுடன்கொலுவிருப்பார் ..*
ஆசைசொல்லக்கூடாது .. ... ... ... ...கண்டாய்சகியே

௰௪- மூப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்வந்துநின்று... ...*
மூயற்சிசெய்யுந்திருவநந்தற் ... ... ... ... கூடிச்சகியே

௰௫- கொப்பழகுகுழன்மடந்தைபள்ளியறைதனிலிருந்து *
கோயில்புகுமேகாந்தச் ... ... ... ... ... சமயஞ்சகியே

௰௬- மைப்பழகுவிழியாயென்பெருமாலைநீசொல்லி... ...*
மருமாலைவாங்கிநீ... ... ... ... ... .. வாராய்சகியே

கொச்சகம்.

தெண்ணீர்வடவருவித்தீர்த்தத்தாசெஞ்சடைமே ... *
வெண்ணீர்புனைந்தார்விரகவெம்மைக்காற்றமல் ... *
கண்ணீர்நறும்புனலாய்க்கைவளையேசெய்கரையாய் *
உண்ணீரிற்கூடலுழாக்கின்றுசெய்வாளே ... ...*

கூடல்சிந்து.

இ-ம்-பந்துவராளி-தாளம்-திரிபுடை.

௧- பாடியமறைதேடிய நாயகர்பன்னகர்பணிநன்னகர்நாயகர் *
பாவலர்மனுக்காவலர்நாயகர்பதஞ்சலிபணிலாளர் *

௨- கோடியமதிசூடிய நாயகர்குழன்மொழிபுணரழகிய நாயகர் *
குறும்பலாவினிற்கூடுவோமேனிற்கூடமேலேநீகூடாய் - *

விருத்தம்.

ஆடல்வளைவீதியிலேயங்கணர்முன்பாட்டசங்கமாங்குவீட்டில் *
தேடல்வளைக்குறிபோல்க்கூடல்வளைத்திருந்துவல்லிதியங்குபோதில் *
கூடல்வளைக்கரமசையமாத்திரைக்கோலேந்திமணிக்கூடைதாங்கி *
மாடமறுகூடுதிரிகூடமலைக்குறவஞ்சிவருகின்றாளே *

குறத்திவருதல்-ஆசிரியப்பா.

சைவமுத்திரையைவானின்மேற்றறிக்குந் ... ... *
தெய்வமுத்தலைசேர்திரிகூடமலையான் ... ... *
வான்புனல்குதட்டுமடைக்குருகினுக்குத் ... ... *
தேன்புரையேறுபூஞ்சித்திரநதியான் ... ... *
எரிநீர்செழிக்கவாரிநீர்கொழிக்கு ... ... *
மாரிநீர்வளர்தென்னாரியநாட்டான் ... ... *
கன்னிமாப்பழுத்துக்கலிதேன்கொழுத்துச் ... *
செந்நெல்காத்தளிக்குநன்னகர்பதியான் ... ... *
ஓராயிரமறையோங்கியபரியான் ... ... *
ஈராயிரமருப்பேந்தியயானையான் ... ... *
சேவகவிருதுஜெயவிடைக்கொடியான் ... *
மூவகைமுரசுமுழங்குமண்டபத்தான் ... ... *
அண்டகோடிகளையாணையாலடக்கிக் *
கொண்டல்போற்கவிக்குங்கொற்றவெண்குடையான் *
வாலசுந்தரிகுழல்வாய்மொழியருட்கண் ... .. *
கோலவண்டிணங்குங்கொன்றைமாலிகையான் *
பூவளர்செண்பகக்காவளர்தம்பிரான் ... ... *
தேவர்கள்தம்பிரான்திருவருள்பாடி ... ... *
இலகுநீறணிந்துதிலகமுமெழுதிக் ... ... *
குலமணிப்பாசியுங்குன்றியும்புனைந்து ... *

சலவைசேர்மருங்கினிற்சாந்திய கூடையும் ... *
வலதுகைபிடித்தமாத்திரைக்கோலும் ... *
மொழிக்கொருபசப்பும்முலைக்கொருகுலுக்கும் ... *
விழிக்கொருசிமிட்டும்வெளிக்கொருகட்டுமாய் *
உருவசியரம்பைகருவமுமடங்க ... ... ... *
முறுவலின்குறும்பால்முனிக்குறும்படங்க ... *
சமனிக்குமுனாயால்சபையெலாமடங்கக் ... *
கமனிக்குமலனுங்கடைக்கணாலடங்கக் ... ...*
கொட்டியவுடுக்குங்கோடாங்கிக்குறிமுதல் ... *
மட்டிலாக்குறிகளுங்கட்டினாலடக்கிக் ... ...*
கொங்கணமாரியங்குச்சிலர்தேசமும் ... ... *
செங்கைமாத்திரைக்கோல்செங்கோல்நடாத்தி ... *
கன்னடந்தெலுங்குகலிங்கராச்சியமுந் ... *
தென்னவர்தமிழாற்செயதம்பதநாட்டி ... ... *
மன்னவர்தமக்குவலதுகைநோக்கி ... ... *
இன்னிசைமடவார்க்கிடதுகைபார்த்துக் ... ... *
காலமுன்போங்குறிகைப்பலனாங்குறி ... *
மேலினிவருங்குறிவேண்டுவார்மனக்குறி ... *
மெய்க்குறிகைக்குறிவிழிக்குறிமொழிக்குறி ... *
மெய்க்குறியாயினுமிமைப்பினிலுரைக்கு ... *
மைக்குறிவிழிக்குறவஞ்சிவந்தனளே ... ... *

இதுவுமது-விருத்தம்.

சிலைநுதலிற்கஸ்தூரித்திலதமிட்டுநறுங்குழலிற்செச்சைசூடிக் .. *
கொலைமதர்க்கண்மையெழுதிமாத்திரைக்கோல்வாங்கிமணிக்கூடைதாங்கி *
முலைமுகத்திற்குன்றிமணிவடம்பூண்டுதிரிகூடமுதல்வர்சாரல் ... *
மலைதனிற்பொய்வஞ்சிகுறவஞ்சியபரஞ்சிகொஞ்சிவருகின்றாளே *

தரு-இ-ம்-தோடி-சாப்புதாளம்.

பல்லவி.

வஞ்சிவந்தனளேமலைக்குறவஞ்சிவந்தனளே *

அநுபல்லவி.

ஞ்சியெழிலபரஞ்சிவரிவிழிநஞ்சுமுழுமறநெஞ்சிபலவினி ... *
ஞ்சிசடைமுடிவிஞ்சையமலனைநெஞ்சினினைவொடுமிஞ்சுகுறிசொல் ()

சரணங்கள்.

௧- வல்லிநிகர்முலையில்லையெனுமிடை வில்லையணிநுதல் முல்லையொருந
கை,வெல்லியெனவொருகொல்லிமலைதனில்வல்லியவனினும்வெல்லியி
வளென-ஓல்லிவடகனடில்லிவரைபுகழ்புல்லிவருகுறிசொல்லி,மதுரித
நல்லிபணிமலைவல்லிகுழன்மொழிச்செல்வி புணர்பவர்கல்விமலைக்குற-

௨- குன்றிலிடிமழைமின்களெனநிறை குன்றிவடமுலைமுங்கவே-மன்றல்க
மழ்சிறுதென்றல்வரும்வழிநின்றுதரளமிலங்கவே- ஒன்றிலிரதியுமொன்
றில்மதனனுமூசலிடுகுழைபொங்கவே- என்றுமெழுதியமன்றில்நடமி
டுகின்றசரணினர்வென்றிமலைக்குற ... ... ... (வஞ்சி)

௩- ஆடியிருகுழைதேடுமொருகுழற்காடுமிணைவிழிசாடவே- கோடுபொ
ருமுலைமூடுசலவையினூடுபிதுங்கிமாலாடவே,தோடுமூரளிவசாடியயி
ரவிமோடிபெறவிசைபாடியே - நீடுமலைமயிலாடுமலைமதிசூடுமலைதிரி
கூடமலைக்குற • ... ... ... ... ... (வஞ்சி)

குறத்தியை-வர்ணித்தல்.

கொச்சகக்கலிப்பா.

முன்னங்கிரிவளைத்த முக்கணர்குற்றாலர்வெற்பில் ... *
கன்னங்கரியகுழற் காமக்குறவஞ்சி ... ... *
பொன்னின்குடம்போற் புடைத்தெழுந்தபாரமுலை ... *
யின்னம்பருத்திட்டா லிடைபொறுக்கமாட்டாதே ... *

தரு-இராகம்- தோடி.-ஆதிதாளம்.

பல்லவி.

வஞ்சிவந்தாள்-மலைக்குற வஞ்சிவந்தாள்

அநுபல்லவி.

வஞ்சிவந்தாள்திரிகூடரஞ்சிதமோகினிமுன்னே ... *
மிஞ்சியவிரகநோய்க்குச்சஞ்சீவிமருந்துபோலே... (வஞ்சி)

சரணங்கள்.

௧ மும்மையுலகெங்கும்வெல்லக்கொம்மைமுலையார்க்கும்நல்ல.செம்மை
யாய்க்குறிகள்சொல்லஅம்மேயம்மேயென்றுமெல்ல ... (வஞ்சி)

௨- சோலையில்வசந்தகாலம்வாலகோகிலம்வந்தாற்போல ... *
கோலமலையார்குற்றாலமலைவாழுங்குற ... (வஞ்சி)

௩- மாத்திரைக்கோலந்துன்னச்சாத்திரங்கண்பார்வையன்னத் ... *
தோத்திரவடிவமின்ன பூத்தமலர்க்கொடியென்ன ... ...(வஞ்சி)

### வசந்தவல்லிகுறத்தியைக்கண்டுமலையைவினவுதல்

### ஆசிரியவிருத்தம்.

அந்தரதுந்துமிமுழங்குநன்னகர்குற்றாலலிங்கரருளைப்பாடி ... *
வந்தகுறவஞ்சிதன்னைவசந்தவல்லிகண்டுமனமகிழ்ச்சிகொண்டு ... *
சந்தமுலைத்துவளுமிடைத்துவளநகைப்பவளவிதழ்த்தையலேயுன் *
சொந்தமலையெந்தமலையந்தமலைவளமெனக்குச்சொல்லென்றாளே ... *

### குறத்திசொல்லல்

### இராகம்-புன்னாகவராளி-ஆதிதாளம்-கண்ணிகள்.

௧- வானரங்கள்கனிகொடுத்து ... மந்தியொடுகொஞ்சும்
மந்திசிந்துகனிகளுக்கு ... ... வான்கவிகள்கெஞ்சும்

௨- கானவர்கள்விழியெறிந்து ... வானவரையழைப்பார்
கமனசித்தர்வந்துவந்து ... காயசித்திவிளைப்பார்

௩- தேனருவித்திரையெழும்பி ... வானின்வழியொழுகும்
செங்கதிரோன்பரிக்காலுந் ... தேர்க்காலும்வழுக்கும்

௪- கூனலிளம்பிறைமுடித்த ... ... வேணியலங்காரர்
குற்றாலத்திரிகூட ... மலையெங்கள்மலையே

௫- முழங்குதிரைப்புனலருவி ... ... கழங்கெனமுத்தாடும்
முத்தமெங்கும்பரந்துபெண்கள்... சிற்றிலைக்கொண்டாடும்

௬- கிழங்குகிள்ளித்தேனெடுத்து ... ... வளம்பாடிநடிப்போம்
கிம்புரியின்கொம்பொடித்து ... வெப்புதினையொடிப்போம்

௭- செழுங்குரங்குதேமாவின் ... பழங்களைப்பந்தடிக்கும்
தேனலர்சண்பகவாசம் .. ... வானுலகம்வெடிக்கும்

௮- வழங்குகொடைமகராசர் ... ... குறும்பலவிலீசர்
வளம்பெருகுந்திரிகூட ... மலையெங்கள்மலையே

௯- ஆடுமரவீனுமணி ... கோடிவெயிலெறிக்கும்
அம்புலியைக்கவளமென்று ... தும்பிவழிமறிக்கும்

௰- வேடுவர்கள்தினைவிளைக்கச் ... ... சாடுபுனந்தோறும்
வித்தையகில்குங்குமமுஞ் ... சந்தனமுந்நாறும்

௰௧- காடுதோறுமோடிவரை ... ... யாடுகுதிபாயும்
காகமணுகாமலையில் ... மேகநிரைசாயும்

௰௨- நீடுபலாவீசர்கைலா ... .. லாசகிரிவாசர்
நிலைதங்குந்திரிகூட ... மலையெங்கள்மலையே

௰௩- கயிலையெனும்வடமலைக்குத் ... ... தெற்குமலையம்மே
கனகமகமேருவென... ... நிற்குமலையம்மே
௰௪- சயிலமலைதென்மலைக்கு ... ... வடக்குமலையம்மே
சகலமலையுந்தனக்குள் ... ளடக்கமலையம்மே
௰௫- வயிரமுடன்மாணிக்கம் ... ... விளையுமலையம்மே
வானிரவிமுழைகள்தொறு ... நுழையுமலையம்மே
௰௬- துயிலுமவர்விழிப்பாகி ... .. யகிலமெங்குந்தேடும்
தூங்கர்திரிகூடமலை ... ..யெங்கள்மலையம்மே
௰௭- கொல்லிமலையெனக்கிளைய ... செல்லிமலையம்மே
கொழுநனுக்காணிமலை... ... பழனிமலையம்மே

௰௮- எல்லுலவும்விந்தைமலை ... ... யெந்தைமலையம்மே
இமையமலையென்னுடைய ... தமயன்மலையம்மே

௰௯- சொல்லரியசாமிமலை ... ... மாமிமலையம்மே
தோழிமலைநாஞ்சிநாட்டு ... ... வேழிமலையம்மே

உ௰- சொல்லினங்கள்முழவுகொட்ட ... மயிலினங்களாடும்
திரிகூடமலையெங்கள் ... ...செல்வர்மலையம்மே

உக- ஒருகுலத்திற்பெண்கள்கொடோம் ...ஒருகுலத்திற்கொள்ளோம்
உறவுபிடித்தாலும்விடோம் ... குறவர்குலந்தாங்கள்

உஉ- வெருவிவருந்தினைப்புனத்திற் ... ... பெருமிருகம்விலக்கி
வேங்கையாய்வெயில்மறைத்த ... பாங்குதனைக்குறித்தே

உ௩- அருளிலஞ்சிவேலர்தமக் ... கொருபெண்ணைக்கொடுத்தோம்
ஆதினத்துமலைகளெல்லாஞ் ... சீதனமாய்க்கொடுத்தோம்

உ௪- பரிதிமதிசூழ்மலையைத் ... ... துருவனுக்குக்கொடுத்தோம்
பரமர்திரிகூடமலை ... ... பழையமலையம்மே

வசந்தவல்லிகுறத்தியைநாட்டுவளமும் நகர்வளமும்வினவுதல்.

விருத்தம்.

கோட்டுவளமுலைகாட்டுங்கொடியின்வளமிடைகாட்டுங்குறிஞ்சிபூத்த *
காட்டுவளங்குழல்காட்டுமலைவளந்தானியுரைத்துக்காட்டுவானேன் ... *
தோட்டுவளம்புரிகாதர்திரிகூடமலைவளருந்தோகையேயுன் ... *
னாட்டுவளமெனக்குரைத்துக்குற்றாலத்தலவளமுநவிலுவாயே ... *

## குறத்தி சொல்லுதல்.

இராகம் - கேதாரகௌளம்-தாளம்-சாப்பு.

கண்ணிகள்.

க- ஆராமந்துயிற்சின்னங்கள்காமத்துரைவந்தான்றுரைவந்தானென்றூத
ஆரமாமுலையின்குரவரவல்குற்றேர்களங்காரஞ்செய்யச் ... [த்
பாரமாமதிவெண்குடைமிஞ்சப்பறக்குங்கிளிப்பரிகள்மின்கொஞ்ச
தேரின்மாரன்வசந்தனுலாவுந்திருக்குற்றாலர்தென்னாரியநாடே ... *

உ- காரைச்சேர்த்தகுழலார்க்குநாணிக்கடலைச்சேர்ந்தகருப்பானமேகம்
சேர்ந்தமுலைக்கிணையாகுமலையைச்சேர்ந்துசிலையொன்றுவாங்கி ... *
நீரைச்சேர்ந்தமழைத்தாரையம்பொழிலக்கொண்டலின்றேறிவெ
ய்யோன்,தேரைச்சூழ்ந்திடக்கார்காலம்வெல்லுந்திருக்குற்றாலர்தென்
னாரியநாடே ... ... ... ... ... ... *

ங- சூழமேதியிறங்குந்துறையிற்சொரியும்பாலைப்பருகியவாளைகள் ...*
கூழைவாசற்பலாவினிற்பாயக்கொழும்பலாக்கனிவாழையிற்சாய...*
வாழைசாய்ந்தொருதாழையிற்றங்கவருவிருந்துக்குபகரிப்பார்போல
தாழைசோரிடவாழைகுருத்திடுஞ்சந்திரசூடர்தென்னாரியநாடே ...*

ச- அன்னலார்மொழிதன்னைப்பழித்ததென்றாடவர்மண்ணின்மூடுங்கரும்
பு, துன்னிமீளவளர்ந்துமடந்தையர்தோளைவென்றுசுடர்முத்தீன்று
பின்னுமங்கவர்மூரலைவென்று பிரியுங்காலத்திற் பெண்மையைவெல்ல
கன்னல்வேளுக்குவில்லாகவோங்குந்தங்கடவுளாரியநாடெங்கணாடே ..*

ரு- தக்கபூமிக்குமுன்புள்ளநாடுசகலதேவர்க்குமன்புள்ளநாடு .........*
முக்கண்ணன்விளையாடியநாடுமுதியநால்மறைபாடியநாடு ... *
திக்கெல்லாம்வளர்ந்தோங்கியநாடுசிவத்துரோகமுநீங்கியநாடு ... *
மைக்கண்ணாள்குழல்வாய்மொருபாகர்வசந்தவாரியநாடெங்கணாடே*

சு- அஞ்சிநூறுமகங்கண்டநாடுஅநேகங்கோடியுகங்கொண்டநாடு ..*
கஞ்சயோனியுதிக்கின்றநாடுகமலவாணிதுதிக்கின்றநாடு ... ... *
செஞ்சொன்மாமுனிபேசியநாடுசெங்கண்மால்சிவனாகியநாடு ... *
வஞ்சிபாகர்திரிகூடநாதர்வசந்தவாரியநாடெங்கணாடே ... *

எ- மாதமூன்றுமழையுள்ளநாடுவருஷமூன்றுவிளைவுள்ளநாடு ... . *
வேதமூன்றும்பலாவுள்ளநாடுவிசேஷமூன்றுங்குலாவுள்ளநாடு ... *

போதமூன்றுநலஞ்செய்யுநாடு புவனமூன்றும்வலஞ்செய்யுநாடு *
நாதமூன்றுருவானவர்குற்றாலர்நாதராரியநாடெங்களுடே ...*
அ-நீங்கக்காண்பதுசேர்ந்தவர்பாவம்நெருங்கக்காண்பதுகன்னலிற்செந்நெல், தூங்கக்காண்பதுமாம்பழக்கொத்துசுழலக்காண்பது தீந்தயிர்மத்து,வீங்கக்காண்பதுமங்கையர்கொங்கைவெடிக்கக்காண்பதுகொல்லையின்முல்லை,எங்கக்காண்பதுமங்கலபேரிகையிசராரியநாடெங்களுடே ... ... .. ... ... *
ங-ஓடக்காண்பதுபூம்புனல்வெள்ளம் ஒடுங்கக்காண்பதுயோகியருள்ளம் வாடக்காண்பதுமின்னார்மருங்குல்வருந்தக்காண்பதுசூலுளைச்சங்கு* போடக்காண்பதுபூமியில்வித்து புலம்பக்காண்பதுகிண்கிணிக்கொத்து,தேடக்காண்பதுநல்லறங்கீர்த்திதிருக்குற்றாலர்தென்னாரியநாடே*

குறத்தி-தலமகிமைசொல்லுதல்

விருத்தம்.

அரிகூடவயன்கூடமறைகூடத்தினந்தேடவரிதாய்நின்ற... ... ... *
திரிகூடப்பதியிருக்குந்திருநாட்டுவளமுறைக்கத்தெவிட்டாதம்மே ...*
கரிகூடப்பிடிதிரியுஞ்சாரலிலேயொருவேடன்கையிலேந்தி... ... *
நரிகூடக்கைலைசென்றதிரிகூடத்தலமகிமைநவிலக்கேளே ... ... *

இராகம்-பிலஹரி-தாளம்-ஜம்பை.

கண்ணிகள்.

க - ஞானிகளுமறியார்கள் சித்ரநதிமூல ... ... ... *
நாதரிந்தவகைசிரித்து சொல்லக்கேளம்மே .. ... *
மேன்மைபெருந்திரிகூடத்தேனருவித்துறைக்கே ... *
மேவுமொருசிவலிங்கத்தேவரகசியமாய்... ... ...*
ஆனதுரையயனுரைத்ததானுமறியாமல்... ... ... *
அருந்தவத்துக்காய்த்தேடித்திரிந்தலையுங்காலம்... *
மோனவானவர்க்கெங்கள்கானவர்கள்காட்டு...... ... *
முத்துகங்கையாறுசிவமதுகங்கையாறே .. ...*
உ - சிவமதுகங்கையின்மகிமைபுவனமெங்கும்புகழும் ... *
செண்பகடாவித்துறையின்பண்புசொலக்கேளாய் *
தவமுனிவர்கூட்டரவுமவரிருக்குங்குகையுஞ் ...... .. *
சஞ்சீவிமுதலானவிஞ்சைமூலிகையும் ... .. ...*
கவனசித்தராதியருமௌனயோகியருங் ... ... ... *
காத்திருக்குங்கயிலாயமேற்றிருக்குமம்மே ... ...*

நவநிதியும்விளையுமிடமவிடமதுகடந்தால் ... ... *
நங்கைமார்குறவையொலிபொங்குமாகடலே...... *

௩ - பொங்குகடல்திரிவேணிசங்கமெனச்செழிக்கும் ... *
பொருந்துசித்ரநதித்துறையிற்பொன்னுமுத்துங்கொழிக்கும்
கங்கையனுப்வடவருவிதங்குமிந்திரசாபம் ... ... *
கலந்தாடக்கழிநீராய்த்தொலைந்தோடும் பாவம் ... *
சங்கைவீதியிற்பரந்துசங்கினங்கள்மேயும்... ... ... *
தழைத்தமதியிற்சிகரமெங்குங்கொழுத்தகயல்பாயும் *
கொங்கலர்செண்பகசோலைக்குழும்பலாவீசர்... ... *
குற்றாலத்திரிகூடத்தலமெங்கள்தலமே ... ... *

௪ - மன்றுதனில்தெய்வமுரசென்றுமேன்முழங்கும் ... *
வளமைபெறுஞ்சதுரயுகம்கிழமையெனவழங்கும் . *
நின்றமதகரிபூசையன்றுசெய்ததலமே ... ... ... *
நிந்தனைசெய்புட்பதந்தன்வந்தனைசெய்தலமே | ... *
பன்றியொடுவேடன்வலஞ்சென்றறிந்தத்தலமே ... ... *
பற்றுகப்பரமருளைகுற்றாலத்தலமே ... ... ... *
வென்றிபெறுந்தேவர்களுங்குன்றமாய்மரமாய்... ... *
மிருகமதாய்த்தவசிருக்கும்பெரியதலமம்மே ... *

வசந்தவல்லி-கிளைவினவுதல்

விருத்தம்.

தீர்த்தவிசேடமுந்தலத்தின்சிறந்தவிசேடமுமுரைத்தாய் திருக்குற்றால *
மூர்த்திவிசேடந்தனையுமொழிந்தோறுநீயுரைத்தமுறையாற்கண்டேன் *
வார்த்தைவிசேடங்கள்கற்றமலைக்குறவஞ்சிக்கொடியேவருகைவாசற் *
கீர்த்திவிசேடமும்பெரியகிளைவிசேடத்தையுநீயளத்துவாயே .. ... *

குறத்தி-சொல்லுதல்

இராகம்-முகாரி-ஏகதாளம்

கண்ணிகள்.

௧-குற்றாலக்கிளைகளத்தைக்கூறக்கேளம்மே ... ... ... ...*
குலம்பார்க்கில்தேவரிலும்பெரியகுலங்கண்டாய்... ...*
பெற்றதாய்தந்தைதலையுற்றுநீகேட்கில்... ... *
பெண்கொடித்தடலையாசன்றனைக்கேட்கவேண்டும் ...*

உற்றதொருபணிமலையின்கொற்றவேந்தனுக்கும் ... *
உயர்மதுரைமாறனுக்குஞ் செயமருகர்கண்டாய் ... *
வெற்றிபெறும்பாற்கடலில்புற்றரவினுறங்கும் ... *
வித்தகர்க்குக்கண்ணனைமைத்துனர்காணம்மே ... *

உ- ஆனைவாகனத்தானைவானுலகிலிருத்தும் ... *
ஆகுவாகனத்தார்க்குந் தாகைவாகனர்க்குந் ... *
தானையாற்றந்தைகாமலறிந்தடகனர்க்குந் ... ... *
தருகாழிமகனர்க்குந்தகப்பனார்கண்டாய் ... *
சேரமகபதிவாசலானைபெரும்பிடிக்குந் ... *
தேனின்றமலைச்சாரல்மானின்றகொடிக்குங் ... *
கானமலர்மேலிருக்குமோனவயனர்க்குங் ... ... *
காமனர்தமக்குமிவர்மாமனாரம்மே ... *

௩-பொன்னுலகிற்றேவருக்குமன்னுலகத்தவர்க்கும் *
பூதலத்தின்முனிவருக்கும்பாதலத்துள்ளார்க்கும் ... *
அன்னவடிவெடுத்தவர்க்குமேனவுருவார்க்கும் ... *
அல்லார்க்குமுன்னுதித்தசெல்வர்காணம்மே ... *
முன்னுதித்துவந்தவரைத்தமயனெனவுரைப்பார் ... *
மொழிந்தாலுமொழியெலாம்பழுதிலைகாணம்மே *
நன்னகரிற்குற்றலநாதரிளைவளத்தை ... *
நானுரைப்பதரிதலகுதானுரைக்குமம்மே ... *

வசந்தவல்லி-வினவுதல்

விருத்தம்.

நீர்வளம்பவளமேனிநிமலர்குற்றலநாதர் ... *
கூர்வளம்பாடியாடுங்குறவஞ்சிக்கொடியேகேளாய் ... *
கார்வளர்குழலாற்கெல்லாங்கருதிநீயிருதாய்ச்சொல்லும்... *
சீர்வளர்குறியின்மார்க்கந்தெரியவேசெப்புவாயே ... *

குறத்தி- சொல்லுதல்.

தரு-இராகம்-தோடி-ஆதிதாளம்

பல்லவி.

வித்தார மென்குறி யம்மே - மணி ... *

அநுபல்லவி.

முத்தாரம்பூணுமுகிழ்முலைப் பெண்ணே ... *
வித்தாரமென்குறியம்மே ... ... *

சரணங்கள்.

௧- வஞ்சிமலையொடு ... கொச்சி ... கொங்கு
மக்கராடந்துலுக்காண ... மெச்சி .. *
செஞ்சிவடகாசி ... நீளம் ... சீனஞ்
சிங்களமீழங்கொழும்பு ... வங்காளம் ... *
தஞ்சைசிராப்பள்ளிக் ... கோட்டை ... தமிழ்ச்
சங்கமதுரைதென்மங்கலப் பேட்டை .. *
மிஞ்சிகுறிசொல்லிப் ... பேராய் ... திசை
வென்றுநாள்பெற்றவிருதுகள் பாராய் (வித்தார)

௨- நன்னகர்குற்றாலந் ... தன்னில் .. எங்கும்
நாட்டுமெண்ணூற்றெண்பத்தேழாண்டுதன்னில் *
பன்னகமாமுனி ... போற்றத் ... தமிழ்ப்
பாண்டியனார்முதற்சிற்றேடுமேய்ந்த ... *
தென்றூருஞ்சித்ர ... சலபமய ... எங்கள்
சின்னணஞ்சாத்தேவன்செப்பேடுமேய்ந்த ... *
முன்னாளிலேகுறி ... சொல்லிப் ... பெற்ற
மோகனமாலைப்பார்மோகன வல்லி (வித்தார)

௩- அன்பாய்வடகுணை ... பாலில் ... கொல்லத்
தாண்டொருநானூற்றிருபத்துநாலில் ... *
தென்காசியாலய ... மோங்கக் ... குறி
செண்பகமாறர்க்குச்சொன்னபேர் நாங்கள் *
நன்பாண்டியராச்சிய ... முய்ய ... சொக்க
நாயகர்வந்துமணக்கோலஞ் செய்ய *
இன்பமதுராமீ ... னாட்சி .. குறி
யெங்களைக்கேட்டதுஞ்சங்கத்தாரசாட்சி (வித்தார)

வசந்தவல்லி-கேட்குதல்.

விருத்தம்.

கலவிக்குவிழிவாள்கொண்டுகாமனைச்சிங்கிகொள்வாய் ... *
குலவித்தைகுறியேயானாற்குறவஞ்சிகுறைவைப்பாயோ ... *
பலவுக்குள்கனியாய்நின்றபரமர்குற்றாலநாட்டில் .. ... *
இலவுக்குஞ்சிவந்தவாயாளெனக்கொருகுறிசொல்வாயே ... *

